Sri K. B. S. MANI : இப்போது அமைச்சர் அவர்கள் அளித்த பதிலிலிருந்து இளம் குற்றவாளிகளுக்கு கல்வித் துறையிலும், தொழில் துறையிலும் நல்ல பயிற்சி அளிக்கப்படுவதாகத் தெரிகிறது. ஆனால் அதே முறையில் பயிற்சியை முடித்துக் கொண்டு வெளிவரும் போது அவர்களுக்கு உத்தியோகம் கொடுப்பதும், தொழில் செய்வதற்குப் பொருள் உதவியும் கொடுக்கப்படுமா என்று அறிய விரும்புகிறேன்.

The Hon. Sri M. BHAKTAVATSALAM : அவர்கள் இதைவிட்டு வெளியேறும்போது என்ன என்ன உதவி அளிக்கலாம் என்று கவனம் செலுத்த வேண்டுமோ அவ்வளவும் கவனித்துச் செய்யப்படுகிறது.

Sri P. U. SHUNMUGAM : படித்துவிட்டு வெளியேறுகிற இளம் குற்றவாளிகளுக்கு அரசாங்கத்தில் உத்தியோகம் கொடுக்கப்படுமா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : உத்தியோகம் கொடுப்பது தரத்தைப் பற்றியது.

Sri A. GOVINDASAMY : இளம் குற்றவாளிகளுக்கு இ.எஸ்.எல்.ஸி. வரையில் படிப்பதற்கு வசதி அளிக்கப்படுவதாகச் சொன்னார்கள். எஸ்.எஸ். எல். ஸி. வரையில் படிக்க வசதி செய்து கொடுக்கப்படுமா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : படிக்க விரும்பினால் வசதி செய்து கொடுக்க உத்தேசிக்கப்படும்.

Sri M. JAGANNATHAN : Sir, may I know who are these young convicts and whether they are different from juveniles? If they are different, how are they different?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : There is no difference. It all depends on the age-limit that the Act prescribes from time to time.

*Rural water-supply*

* 363 *Q.*—Sri P. G. MANICKAM : Will the Hon. the Minister for Revenue be pleased to state the amount spent district-wise for the Comprehensive Scheme for Rural Water-supply in the State from 1st October 1957 up to 31st March 1958?

The Hon. Sri M. A. MANICKAVELU : A statement [a] is placed on the table of the House.

Sri P. G. MANICKAM : 1957–58-ம் பட்ஜெட் நிதி வருடத்தில் கிராமத் தண்ணீர் சப்ளைக்காக ஒதுக்கப்பட்ட தொகை எவ்வளவு ? செலவிடப்பட்ட தொகை எவ்வளவு ? செலவழிக்கப்படாமல் கவர்மெண்டுக்குத் திரும்பிவிட்ட தொகை எவ்வளவு ?

The Hon. Sri M. A. MANICKAVELU : ஒதுக்கப்பட்டது 36 லட்சம். இங்கே குறிப்பிலே அக்டோபர் 1957-ல் இருந்து மார்ச் 1958 வரைக்கும் 26 லட்சத்து 71 ஆயிரம் செலவழிக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. அதற்குப் பிறகு நான்கைந்து மாதங்களுக்குப் புள்ளிவிவரம் இல்லை. இந்தக் காலத்திலும் பணம் செலவிடப்பட்டிருக்கும். ஆகவே ஏறக்குறைய ஒதுக்கப்பட்ட பணம் செலவாகியிருக்கலாம்.

Sri N. R. THIAGARAJAN : மதுரைக்குச் செலவிடப்பட்ட தொகை மிகக் குறைவு இல்லையா என்பதற்கு " இல்லை " யென்றார்கள். இங்குள்ள ஸ்டேட்மெண்டிலும் இதர இடங்களில் லட்சக்கணக்காகச் செலவிடப்பட்டிருக்கும்போது மதுரைக்கு 53 ஆயிரம் தான் செலவிடப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. இது நியாயமா ? தர்மமா ?

---

[a] Printed as Appendix II on page 400 infra.

20th September 1958]

MR. SPEAKER : நியாயமா, தர்மமா என்று இங்கே கேட்கக்கூடாது.

SRI S. RAMALINGA PADAYACHI : விஞ்ஞான முறையில் சந்திரமண்டலத்திற்கு ஆட்கள் அனுப்பப்படுகிற இந்தக் காலத்திலும் கூட உடையார்பாளையம் தண்ணீர் இல்லாமல் தவிக்கிறதே ? தண்ணீர் சப்ளைக்கு அங்கே ஒரு திட்டம் வகுக்கக்கூடாதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : உடையார்பாளையத்தில் தண்ணீர் சப்ளை செய்ய வசதி செய்யப்பட்டிருக்கிறது. இப்போது குறிப்பிட்ட பிரகாரம் அந்த ஜில்லாவிற்கு 3 லட்சத்திற்கு 50 ஆயிரம் செலவாகிறது. மதுரைக்கு 53 ஆயிரம்தான் ஆகியிருக்கிறது.

*Mettur Right Bank Canal.*

* 364 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

கோயம்புத்தூர் ஜில்லா, பவானி தாலூக்காவிலே ஜம்பை கிராமம் வரைக்கும் கொண்டுவரப்பட்டிருக்கும் மேட்டூர் வலது கரை வாய்க்காலை ஜம்பை உப-பிரிவிலிருந்து அப்பக்குடல் குளத்து (ஏரி) வரைக்கும் விஸ்தரிக்கவேண்டும் என்று 1957-ம் வருஷம் டிஸம்பர் 30-ம் தேதி மேற்படி கிராமத்துக்கு விஜயம் செய்த கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்களிடம் விவசாயிகளால் கொடுக்கப்பட்ட விண்ணப்பத்தின்மீது எடுக்கப்பட்டு வரும் நடவடிக்கைகள் யாவை ?

THE HON. SRI P. KAKKAN : The Government have carefully examined the request of the petitioners for extending the Mettur Right Bank Canal up to Appakudal, etc., villages. As the contemplated ayacut of 18,000 acres under the Right Bank Canal has already been secured, the question of inclusion of new lands in the ayacut of the canal can be considered only if the secured ayacut cannot be developed fully. It has therefore been decided to watch the development of the ayacut for some more years before considering the question of extending the canal any further.

SRI P. G. MANICKAM : மேற்படி வாய்க்காலானது, ஜம்பை வரைக்கும் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் ஜம்பையில் இருந்து கழி 9-30 a.m.
வாகிற தண்ணீர் ஆற்றில்தான் போய் கலக்கிறது. ஆகவே, கழிவாகிற தண்ணீரையாவது வாய்க்கால் மூலம் அப்பக்குடலுக்குக் கொண்டு போனால் அது விவசாயிகளுக்கு பயன்படுவதோடு ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்களுக்கு அதன் மூலம் தண்ணீர் கிடைக்கும். ஆகவே இந்த அரசாங்கம் அதை மீண்டும் பரிசீலனை செய்யுமா ?

THE HON. SRI P. KAKKAN : இப்பொழுது முடியாது. இரண்டு மூன்று வருடங்கள் பார்த்துத்தான் பரிசீலனை செய்யப்படும்.

*Kallakudi temples*

* 365 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether trustees have been appointed for the Kallakudi village deities in Lalgudi taluk, Tiruchirappalli district;

(*b*) how long the office had been kept vacant;

(*c*) the reasons for not appointing new trustees so far;

(*d*) the reasons for the removal of the old trustee;

(*e*) how soon trustees will be appointed ; and